முன்பக்கத் தொடர்:-

சம்பளம், பண்டங்களை உற்பத்தி செய்வது ஆகிய கோட்பாடுகளின் அடிப்படையில் தொழிற் தகராறுகளை நியாயமான முறையில் தொழில் கோர்ட்டுகள் தீர்க்க வழி செய்தல்* தொழிலாளர்களுக்கு தொழிற்சாலையில் செய்யப்பட வேண்டிய பாதுகாப்பு, சுகாதாரம், இதர ஏற்பாடுகளை கண்காணிக்க தொழிற் சங்கங்களுக்கு உரிமையுண்டு* வீட்டு வசதி, வாடகை கட்டுப்பாடு சட்டத்தை கண்டிப்பாக அமல் நடத்துதல்; வேலையளிப்பவர்கள், தொழிலாளர்கள் நலனை முன்னிட்டு அதைத் திருத்துவது. தொழிலாளர்கள், மத்தியதர வர்க்க சிப்பந்திகள் ஆகியோருக்கு வீடுகட்டும் திட்டங்களுக்கு உதவுதல்* இவற்றுக்கு பாதகமாக, மத்திய சர்க்கார் சட்டம் எதுவும் அமல் செய்யப்பட மாட்டாது* இதே உரிமை சாசனம்; வர்த்தக குமாஸ்தாக்கள், கடை சிப்பந்திகள் இதர எல்லா மத்தியதர வகுப்பு உத்தியோகஸ்தர்களுக்கும் அமல் ஆகும்.*

மொழிவாரி மாகாணங்கள்:-

① தற்போதைய சென்னை ராஜ்யத்தை மொழிவாரி மாகாணங்களாக அமைத்தல். ② திருவாங்கூர் கொச்சி மன்னர் ராஜ்யங்களின் ஆட்சியும், ஹைதராபாத்தின் நிஜாம் ஆட்சியும், மைசூர் மகாராஜாவின் ஆட்சியும் ஒழிக்கப்பட்டு அதன் மூலம் மலையாளிகள், தமிழர், கன்னடியர்களின், தெலுங்கர்களை, அவரவர் தாயகத்துடன் இணைக்க ஏற்பாடு செய்தல். ③ எல்லைகள், பற்றிய தகராறுகள், மக்களின் விருப்பத்தையும் மொழிவாரித் தாயகத்தின் ஒருமைப்பாட்டையும் கணக்கில் எடுத்துக் கொண்டு எல்லை கமிஷன் வாயிலாக தீர்க்கப்படும்.

கல்வி, கலாச்சாரம் சுகாதாரம்:-

① எல்லா ஜாதிக் கொடுமைகளும், தீண்டாமை உள்பட தண்டனைக்குரிய குற்றங்களாகும். ② பின்தங்கியுள்ள வகுப்பினருக்கு கல்வி உத்தியோகம் ஆகியவற்றில் பிரத்யேக சலுகைகள். ③ மத சுதந்திரம், தொழும் உரிமை மதிக்கப்படும். பாதுகாக்கப்படும்* வகுப்பு வெறுப்பு பரவாமல் சிறுபான்மையோருக்கு பாதுகாப்பு அளிக்கப்படும். ④ பெண்களைக் கொடுமைப்படுத்தும் சமூக அநீதிகள் அகற்றப்பட்டு அவர்களுக்கு சம உரிமை அளிக்கப்பட வேண்டும். சொத்துரிமை, விருப்ப பூர்வமான திருமணம், விவாகரத்து உரிமை, உத்தியோகத்திலும், வேலையிலும் சேரும் உரிமை ஆகியவற்றில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சம உரிமை உண்டு. ⑤ மக்கள் ஸ்தாபனங்கள், ஆசிரியர்களின் ஒத்துழைப்புடன் கட்டாய ஆரம்பக் கல்வி இலவசக் கல்வி திட்டத்தை அமலாக்குதல். ⑥ கூடிய சீக்கிரத்தில் பிராந்திய மொழியே போதனா மொழியாக ஆக வேண்டும். சர்வகலாசாலை கல்விக்கும் பிராந்திய மொழிகளில் பாடப்புத்தகங்களை தயாரிக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் ⑦ சம்பந்தப்பட்ட பிராந்தியத்தின் அரசாங்க மொழி அந்த பிராந்திய மொழியாகவே இருக்கும். ⑧ அதற்குப்படியாக மாணவர்கள் கல்வி பயில வசதியாக இருக்கும் பொருட்டு, உயர்தர பள்ளிகளின் ஷிப்ட் முறை அமலாக்குவது. ⑨ உயர்தர கல்வியையும்; சர்வகலாசாலை கல்வியையும் விரிவுபடுத்த உள்ள சாத்தியங்களனைத்தையும் உபயோகப்படுத்தல். ⑩ விஞ்ஞான, மின்சார கல்விக்கு ஊக்கம் அளித்தல். தொழில் நுணுக்க ஸ்தாபனங்களை அதிகரித்தல். ⑪ வசிப்பிடங்கள் போன்ற இடங்களிலும் புத்தகசாலை வசதிகளை ஏற்படுத்துதல், அவற்றுக்கு புத்தகங்களை கிராமங்களுக்குக் கொண்டு செல்லும் சாதனங்களை அளித்தல். ⑫ நாடகம், கலை, தியேட்டர் அபிவிருத்திகளுக்கு அரசாங்கம் உதவியளித்தல். மக்களிடையுள்ள பயம், மூடநம்பிக்கைகள், அடிமைத்தனம் நீங்கவும், வகுப்பு- ஜாதி துவேஷத்தையும் நீக்கவும் உதவபுரியும் முறையில் கலை, கலாச்சாரம் ஆகியவை ஊக்குவிக்கப்படும். சமாதானம் விரும்பும் சகல நாட்டு மக்களிடையேயும் சகோதரபாவம் நிலவவும், இன, தேசிய துவேஷங்களை எதிர்த்துப் போராடவும் மக்களை வளர்க்கும் முறையில் ஊக்கம் அளிக்கப்படும். ⑬ எல்லா மொழிகளிலும் கலைக்களஞ்சியம் தயாரிக்கப்படும். ⑭ பொது ரேடியோ வசதிகள் அதிகரிப்பது. ⑮ கிராமப்புறங்களில் சுகாதார யூனிட்டுகளும், ஆஸ்பத்திரிகளும், மோட்டார் வாகன வசதிகளுடன் ஏற்படுத்துவது. காலரா, மலேரியா, பிளேக், இதர தொத்து வியாதிகளை மாகாணத்தில் ஒழிக்கவும் கவனம் செலுத்தப்படும். கிராமப்புறங்களுக்கு பிரசவ விடுதிகள் ஏற்படுத்தப்படும்.*